30th April 1960]

SRI D. S. AUTHIMOOLAM: சுற்றுப்பிரயாணம் செய்யும் போது, உபசாரப்பத்திரம் பெற்றுக்கொண்டு திறப்பு விழா நடத்துகிறுர்களே, அப்பொழுது மந்திரிகள் வாக்குறுதி கொடுக்கிறுர்களே. உதாரணமாக தென்காசி தாலூகா மாரந்தை பஞ்சாயத்து போர்ட்டில் உபசாரப்பத்திரம் அளித்தபோது முதன் மந்திரி அவர்கள் பதில் அளிக்கையில், பள்ளிக்கூடம் கட்டுவதற்கு உதவி செய்வதாகத் தெரிவித்திருக்கிறுர்கள். அம்மாதிரி செய்வது கெட்டபழக்கமாக இருக்கிறது என்பதை மந்திரி அவர்கள் உணர்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அம்மாதிரி நடந்ததோ இல்லேயோ கனம் அங்கத்தினருக்கு பதில் சொன்னல் இதைப் பற்றி ஒப்புக்கொண்டதுபோல் ஆகும். இதைப்பற்றி இப்போது பதில் சொல்லக்கூடிய நிலேமையில் இல்லே.

*College for women at Salem*

* 898 *Q.*—SRIMATHI HEMALATHA DEVI: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதில் அளிப்பாரா—

சேலத்தில் பெண்களுக்கென்று தனிக்கல்லூரி ஒன்று ஏற்படுத்த அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.

SRIMATHI HEMALATHA DEVI: பெண்களுக்கென்று தனிக் கல்லூரி ஏற்படுத்த உத்தேசம் இல்லே என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். சேலம் ஜில்லாவிலே இருக்கிற பெண்களுக்கு உயர்நிலேப்பள்ளிப் படிப்பு போதும் என்று கனம் அமைச்சர் அவர்கள் கருதுகிறுர்களா ? இல்லே பொருளாதாரம் காரணமாக நிறுத்தப்பட்டிருக்கிறதா ? இதற்காக பொதுமக்கள் தொகை கொடுத்தால், அரசாங்கம் எவ்வளவு தொகை கொடுக்க முன்வரும் என்று அமைச்சர் அவர்கள் கூறுவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சேலத்தில் பெண்களுக்கென்று அரசாங்கம் தனியாக ஒரு கல்லூரி ஏற்படுத்த உத்தேசம் இல்லே. தனிப்பட்டவர்கள் முயற்சி செய்துகொண்டு வருகிறுர்கள். எந்த அளவிற்கு நிறைவேற்றுவார்கள் என்று சொல்லமுடியாது.

SRI A. VEDARATHNAM: இந்த மாநிலத்தில் ஜில்லா தோறும் பெண்கள் கல்லூரிகள் இருக்கின்றனவா ? அப்படி இல்லேயென்ருல் ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு பெண் கல்லூரியை ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா ? இந்த மாநிலத்தில் எவ்வளவு பெண்கள் கல்லூரிகள் இருக்கின்றன என்பதைப்பற்றிய விவரங்களே அறிவிப்பார்களா ?

[30th April 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: சேலத்தைப் பொறுத்த வரை எவ்வளவு கல்லூரிகள் இருக்கின்றன என்ற விவரம் என்னிடத்தில் இல்லே. நம்முடைய இலக்கு ஒரு ஜில்லாவிற்கு ஒரு கல்லூரி இருக்கவேண்டும் என்பது. இந்த கல்லூரியில் பெண்கள் சேருவதற்கும் இடம் இருக்கிறது.

SRI C. NATARAJAN: சேலத்தில் பெண்கள் கல்லூரி ஏற்படுத்த தனியார் முன்வந்திருக்கிறர்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்ஞர்கள். தனியார் இதைப் பற்றி மனு செய்துக்கொண்டிருக்கிறர்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதற்குத் தனிக்கேள்வி கொடுத்தால் பதில் சொல்லுகிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR- சேலம் பெரிய ஜில்லாவாக இருந்தும் கூட ஆண்களுக்காக இருந்த கல்லூரி முனிசிபாலிடி நடத்திக்கொண்டிருந்ததை இப்போது சர்க்கார் எடுத்துக் கொண்டார்கள். வேறு எங்காகிலும் ஒரு கல்லூரி ஆரம்பிப்பதற்குக் கேட்டுக்கொண்டால், இதைப் பற்றி யோசிக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சபை முன் இருக்கும் கேள்வி பெண்கள் கல்லூரியைப் பொறுத்தது. தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI R. KRISHNASWAMI NAIDU: ராமநாதபுரம் ஜில்லாவில் பெண்கள் கல்லூரி இல்லே, ஒரு பெண் கல்லூரியை ஆரம்பிக்க தனியார் முன்வந்தால் சர்க்கார் போதிய ஆக்கம் அளிக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கல்லூரி அங்கு ஒன்று இருந்தது. இதில் போதிய மாணவிகள் வராததினுல் இது மூடிவிடப்பட்டது.

SRI A VEDARATHNAM: ஆண்கள் கல்லூரியில் பெண்களும் சேர்ந்து படிக்கலாம் என்று கனம் அமைச்சர் அவர்கள் சொல்லி இருக்கிறர்கள். ஆகையால் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு கல்லூரி ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: முக்கியமாக உயர்நிலேப் பள்ளி அளவிலேதான் செய்ய வேண்டுமென்று சொன்னேன். கல்லூரியைப் பொறுத்தவரையில் அம்மாதிரிச் சொல்லவில்லே. அப்படி பெண்களுக்காக ஒரு கல்லூரியில்லாததினுல் பெண்கள் படிக்காமல் இருப்பது நல்லது அல்ல என்று சொல்லவிரும்புகிறேன்.

*Assault on a Syce by a doctor of the King Institute, Guindy*

*899 Q.—SRI K. RAMACHANDRAN: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether it is a fact that in December, 1959 a Doctor of the King Institute assaulted a Syce causing him injuries;